22nd September 1961]

SRI N. K. PALANISAMI : The Hon. Minister has stated that the mill would be started in the public sector. May I know whether the private sector would be allowed to invest 49 per cent of the share capital?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : This is purely in the public sector and I do not understand how the private shareholders could come in there.

*Closure of hotels in Coimbatore town*

* 1696 *Q.*—SRI N. MARUDACHALAM : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கோவை டவுன் ஒட்டல் முதலாளிகள் ஒட்டல்களை மூடியதால் தொழிலாளிகள் வேலையில்லாமல் தவிப்பதைக் குறித்து கோவை ஜில்லா ஒட்டல் தொழிலாளர் சங்கம் 1961–ம் ஆண்டு மே மாதம் 31-ம் தேதி ஜூன் மாதம் 6-ம் தேதி, 20-ம் தேதி, 25-ம் தேதிகளில் சர்க்காருக்குப் புகார் செய்துள்ளதா ?

(இ) அதன் மீது சர்க்கார் எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) இல்லை, ஐயா.

(*b*) எழவில்லை.

SRI N. MARUDACHALAM : கோவையில் உள்ள மக்கள் உணவு விடுதியில் உள்ள தொழிலாளர்களை வேலையிலிருந்து நீக்கிவிட்டு, வேறு பெயரில் புதிதாகக் கட்டப்பட்ட ஒரு உணவு விடுதி ஏற்படுத்தியிருக்கிறார்கள். இதைப் பற்றித் தொழில் இலாக்காவிற்கும், தொழில் அமைச்சருக்கும், லேபர் ஆபீசருக்கும் எழுதியும் ஒருவிதமான நடவடிக்கையும் எடுக்கவில்லை. ஆகவே, அவர்களை மீண்டும் உடனடியாக வேலையில் அமர்த்திக்கொள்வதற்கு அரசாங்கம் உத்தரவிடுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஒவ்வொரு ஒட்டல் பிரச்னையையும் தொழில் அதிகாரிகள் கவனித்து சமரசம் செய்து கொண்டுவருகிறார்கள். சில இடங்களில் அவர்களால் சமரசம் செய்ய முடியாமல் போய்விடுகிறது. உதாரணமாக இப்பொழுது இருக்கக்கூடிய நிர்ப்பந்தத்தின் காரணமாக ஒட்டல் முதலாளிகள் வேலை நடத்த முடியாத நிலைமையும் ஏற்படுகிறது.

SRI V. K. KOTHANDARAMAN : ஹோட்டல்களை ஒரேயடியாக மூடிவிடுவதில்லை. தொழிலாளர்கள் நியாயமான கோரிக்கைகளைக் கேட்கிறபோது போர்டை மாற்றிவிடுகிறார்கள். இரண்டு மாதங்களுக்கு முன்பு கோயம்புத்தூரில் கிருஷ்ணா லாட்ஜ் என்று இருந்தது. அதில் “ஸ்ரீ” என்று சேர்த்து ஸ்ரீ கிருஷ்ணா லாட்ஜ் என்று மாற்றிவிட்டார்கள். இப்படித் தொழிலாளர்களை ஏமாற்றக்கூடிய அளவுக்கு தொழிலாளர்களின் கோரிக்கைகளைத் தீர்த்து வைக்க முடியாத அளவிற்கு நிலைமையிருக்கிறதே, இது போன்ற பிரச்னைகளைத் தீர்த்து வைப்பதற்கு என்ன பரிகாரம் காணப்படுகிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அங்கத்தினர் அவர்கள் குறிப்பிடுகிற பிரச்னை ஏற்பட்டால் அதை எந்தெந்த வகையில் தீர்த்து வைக்க வேண்டுமோ அப்படித் தீர்த்து வைக்க அதிகாரிகள் கவனம் செலுத்துகிறார்கள். இங்கு, கமிஷனர் ஆப் லேபர் தெரிவித்திருக்கும் அபிப்பிராயத்தை வாசிக்க விரும்புகிறேன். இது கோவையைப் பற்றி. அங்கு அதிகமாக ஹோட்டல்களில் இந்தத் தகராறு வந்தது.

[22nd September 1961

The Commissioner of Labour has stated that there have been representations that Coimbatore District Hotel and General Workers' Union in Coimbatore and Madras City Hotel Workers' Association in Madras are adopting a policy of forcing closures of hotels through concerted indicipline and making the employer pay compensation to the workers based on wages plus food allowance. In view of the representations, the Commissioner of Labour has stated that he has called for particulars from all Labour Officers regarding the position in each district so as to have a comprehensive picture of the situation and suggest remedial measures, if any.

SRI N. MARUDACHALAM : ஹோட்டல் முதலாளிகள் சர்க்கார் உத்தரவைக் கூட மீறுகிறார்களே, அதற்கு ஹோட்டல் முதலாளிகள் மீது சர்க்கார் என்ன நடவடிக்கைகள் எடுக்கிறார்கள் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஹோட்டல் முதலாளிகள் சர்க்கார் உத்தரவை மீறினால் கண்டிப்பாக நடவடிக்கைகள் எடுத்துக் கொள்கிறோம். தொழிலாளர்களும் இருக்கிறார்கள். ஒரு கேஸ் என்னிடம் வந்தது. தகராறு வந்தது என்றால் இட்டிலியில் கூட ஊசியை வைக்கிறார்கள் என்று சொல்லுகிறார்கள், அப்படிக் கூட செய்கிறார்கள்.

SRI M. KALYANASUNDARAM : முதலாளிகள் எழுதிய புகார்களைத்தான் அமைச்சர் அவர்கள் படித்தார்கள். அதை ஜில்லா அதிகாரிகளுக்கு அனுப்பி அவர்கள் அபிப்பிராயமும் கோரப்பட்டிருக்கிறது. லேபர் கமிஷனர் லேபர் ஆபீஸர்களைக் கேட்டிருக்கிறார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The Commissioner of Labour has stated that there have been representations that Coimbatore District Hotel and General Workers' Union in Coimbatore and Madras City Hotel Workers' Association in Madras are adopting a policy of forcing closure of hotels through concerted indiscipline. தொழிலாளர்கள் கொடுத்ததும் பரிசிலினை செய்யப்படுகிறது.

SRI M. KALYANASUNDARAM : தொழிற்சங்கப் பிரதிநிதிகளை அழைத்து லேபர் கமிஷனர் நேரில் பேசினார்களா ? அப்படி பேசினால் அவர்கள் என்ன பதில் கொடுத்தார்கள் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தொழிலாளர்களிடம் இருந்தும் வந்தது. லேபர் ஆபீஸர், லேபர் கமிஷனர் அதைக் கவனித்திருக்கிறார்கள். இரு சாராரிடமும் பேசி இதைத் தீர்க்கப் பார்க்கிறார்கள்.

SRI K. VINAYAKAM : கோவையிலுள்ள கிருஷ்ண விலாஸ் என்ற ஹோட்டல் மூடுவதற்குக் காரணம், அங்கு சாம்பாரில் சர்க்கரையைப் போட்டும், காப்பியில் உப்பைப் போட்டும் இப்படியெல்லாம் வழங்குவதால் கோளாறு ஏற்பட்டு, வருகிற கஸ்டமார்ஸ் கம்ப்ளயின்ட் செய்த பிறகு இந்த ஹோட்டல் மூடும் நிலை ஏற்பட்டது அமைச்சர் அவர்களுக்குத் தெரியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : As regards the New Krishna Vilas, the Labour Officer has stated that he received only a complaint of dismissal of a worker and that he did not receive any complaint relating to the closure of the hotel. He

22nd September 1961]

has also reported that the hotel was subsequently closed and the matter was settled by the Union and the management accepting the closure and the compensation and other dues offered by the management to the workers.

### *World Bank—Financial assistance from*

* 1697 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether Mr. Stewert Mason, Leader of the World Bank Mission, had a discussion with the Finance Minister on 15th February 1961 regarding land reclamation schemes, agricultural improvement plans with particular reference to fertiliser schemes;

(*b*) whether any assistance was promised for these schemes; and

(*c*) if so, the details thereof?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) to (*c*) The Finance Minister had an informal discussion with Mr. Greenveld, World Bank expert for the purpose of assessing the quantum and nature of assistance that might be obtained from the World Bank, for the projects and schemes undertaken in this State. No commitments were made.

SRI N. K. PALANISAMI : May I know whether the Hon. Finance Minister during his recent tour of the American continent, contacted World Bank Officials and tried to get as much financial help as possible from them?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The hon. Member may put a separate question to the Hon. Finance Minister.

### *Damage to crops (Thanjavur district)*

* 1698 *Q.*—SRI T. R. RAMAMIRTHA THONDAMAN: கனம் உள்துறை அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தஞ்சை ஜில்லாவில் இந்த பசலியில் அதிக மழையின் காரணமாகவும் பூச்சிகள் காரணமாகவும் மகசூல் அதிகமாக பாதிக்கப்பட்டுள்ளது என்பது சர்க்காருக்குத் தெரியுமா ?

(இ) அப்படியானால், பாதிக்கப்பட்ட விவசாயிகளுக்கு நிவாரணம் அளிக்க உத்தேசம் உண்டா ? எப்போது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes.

(*b*) All precautionery measures were taken to avert major breaches in rivers and tanks in Thanjavur district. Sufficient quantities of seeds, fertilisers and pesticides were supplied to the ryots for transplantation and rejuvenation of the damaged crops.

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN : முன்பு மழைக் குறைவு காரணமாக விவசாயத்திற்கு தொல்லைகள் ஏற்பட்டு, பிறகு இப்பொழுது வெள்ளம் காரணமாக இந்தத் தொல்லைகள் மீண்டும் ஏற்பட்டது. இதனால், சாகுபடி செய்யக்கூடிய குத்தகை சாகுபடிக்காரர்கள் நிலச்சுவாந்தார்களுக்கு அளிக்க வேண்டிய நெல் அளிக்க முடியாத கஷ்டங்கள் இருப்பதால் அவர்களுக்கு ஏதாவது பரிகாரம் தேட வழிவகை செய்வார்களா ?